

# அனடோல்

ஆங்கிலத்தில்: இவ் டிடஸ் படங்கள்: பால் கால்டன்

தமிழில்: குமரேசன் முருகானந்தம்

# அனடோல்

ஆங்கிலத்தில்: இவ் டிடஸ் படங்கள்: பால் கால்டன்

தமிழில்: குமரேசன் முருகானந்தம்





**பிரான்ஸ்** முழுவதிலும் **அனடோலை** விட மகிழ்ச்சியான மற்றும் மிகவும் திருப்தியான எலி எங்கும் இல்லை.



அவர் ஒரு சிறிய எலிகளுக்கான கிராமத்தில்

வசித்திருந்தார்.



அந்த கிராமம் **பாரிஸ்** அருகே இருந்தது.



அவருடைய அன்பான மனைவி – டவ்சிட்டியுடன் வசித்து வந்தார்.

மேலும் அவர்களுடைய ஆறு

குழந்தைகளுடன்-

பால் மற்றும் பவ்லெட்டி



க்ளாட் மற்றும்

க்ளாடெட்டி

ஜார்ஜ் மற்றும் ஜார்ஜ்ட்டி



ஒவ்வொரு மாலையும் இருட்டத் தொடங்கியதும், கணவன்மார்களும், தந்தையரும், அகலமான மற்றும் வரிசயாக மரங்களிருக்கும் சாலையின் நெடுகே தங்கள் குடும்பத்திற்கான உணவைத்தேட **பாரிஸ்** நகரை நோக்கி சைக்கிள்களில் செல்வார்கள்.

**பாரிசை** அடைந்ததும், அவர்கள், தங்களுக்கு மட்டுமே தெரிந்த ரகசிய பாதைகளின் வழியாக மனிதர்களின் வீடுகளில் நுழைந்தனர். ***அனடோலி***ன் கூட்டாளி பொதுவாக ***கேஸ்டன்*** ஆவார்.

ஓர் இரவு, அவர்கள், ஒரு வீட்டின் சமையலறையில் மிச்சமான உணவிற்காகத் தேடிக் கொண்டிருந்தபோது **அனடோல்**, அருகிலுள்ள அறையில் மனிதர்கள் எலிகளைப் பற்றிப் பேசிக்கொண்டிருப்பதைக் கேட்டார். அவர், சோபாவின் அடியில் பதுங்கி, அவர்கள் பேசுவதை ஆர்வத்துடன் கேட்டபடி இருந்தார்.



“ஓ, பயங்கரமான எலிகள்!” என்று ஒரு பெண்மணி முறையிட்டாள்.

அவை எனது சமையலறையில் நுழைந்து விடுகின்றன, குப்பையைத்தொட்டியைக் கிளறியோ, மேசையின் மீது ஏறி அங்கிருப்பதை எடுத்தோச் சென்றுவிடுகின்றன. சிலநேரங்களில் சாப்பிட வைத்திருக்கும் உணவையும் கொறித்துவிடுகின்றன. நான் அவற்றை குப்பையில்தான் போடவேண்டும்---

அவற்றின் கால்கள் எவ்வளவு அழுக்கானவை என்று அந்த கடவுளுக்கே வெளிச்சம்!”

“அவை பாரிஸ் நகரத்திற்கே ஓர் இழுக்கு,” என்றார் வெறுப்புடன் அந்த மனிதர்.
“எலிகள் நமக்கு எதிரி!”

மிகவும் அதிர்ச்சியுற்று, ***அனடோல்*** மீண்டும் சமையலறைக்கு ஓடினார்.

“***கேஸ்டன்*** -- உடனடியாக நாம் இங்கிருந்து வெளியேறவேண்டும்!”

வீட்டிற்கு செல்லும் வழியில், மிகவும் வருத்தமுடன் இருந்த ***அனடோல்***, தனது நண்பரிடம் நடந்தவற்றைக் கூறினார்.

“அச்சோ! இது ஒரு அற்ப விசயம்,” என்று பரிகாசம் செய்தார் ***கேஸ்டன்***.

“மனிதர்கள் மனிதர்கள் தான், எலிகள் எலிகள் தான். நமது அன்பிற்குரியவர்களுக்கு உண்ண உணவு வேண்டும். அது நமக்கு கிடைக்குமிடம் மனிதர்களின் வீடுகளே.”

“ஆனால், அவர்கள் நம்மைப்பற்றி இவ்விதம் எண்ணுவார்கள் என்று கனவிலும் நினைத்தது இல்லை.” என்று துக்கமுடன் அழுதார் ***அனடோல்***.

“வெறுக்கப்பட்டிருப்பதும், தேவையற்றதாக ஒதுக்கப்பட்டிருப்பதும் மிகவும் கொடூரமானது! *எங்கே எனது சுய மரியாதை? எனது பெருமை? எனது கௌரவம்?*”

“விட்டுத்தள்ளு, ***அனடோல்***. *அது தன் வாழ்க்கை!*”



***டவ்சிட்டி*** அவரை சமாதானப்படுத்தினார்.

“நீங்கள் மிகசரியாக சொன்னீர்கள், ***அனடோல்***,” என்றார் அவர்.

நாம் மனிதர்களுக்கு ஏதேனும் திரும்பக் கொடுக்கமுடிந்தால் மட்டுமே --- ஆனால் ஐயோ, அது நடக்காதக் காரியம்!”

***அனடோல்*** குதித்தார், அறையைச் சுற்றிலும் ***டவ்சிட்டி***யையும் ஆட விட்டார்.

நடக்காது? இல்லை, ஒருவேளை நடக்கலாம், என் இனியவளே!

நீ எனக்கு அற்புதமானதொரு யோசனையைக் கொடுத்திருக்கிறாய்.”

அவர் தட்டச்சுப்பொறியைக்கொண்டு முப்பது அல்லது நாற்பது குறியீடுகளைத் தட்டச்சு செய்தார்:

கூடுதல் சிறப்பான சுவைமிக்கது

மிகவும் சுவையானது

சுவையானது

அவ்வளவு நன்றாக இல்லை

மோசம்



பின்னர் அவர் ஒவ்வொரு குறியீட்டு துண்டிலும் ஒரு நீண்ட குண்டூசியைச் செருகினார். பின்னர், அவற்றை அவருடைய பெட்டிக்குள் கவனமாக வைத்தார்.

அன்று மாலை பாரிசுக்குச் செல்லும்போது, "***காஸ்டன்***, நான் இதை தனியாக மேற்கொண்டால் நீ அவமானம் என்று நினைப்பாயா?

என் மனதில் ஒரு யோசனை இருக்கிறது, நான் அதை ரகசியமாக செயல்படுத்த வேண்டும்." என்றார் ***அனடோல்***.




"நான் உனது நண்பன், இல்லையா? நண்பன் ஒருபோதும் அவமானப்படுவதில்லை -- நண்பனுக்கு நம்பிக்கை உண்டு. நல்வாழ்த்துக்கள்!"




அவர்கள் பேரிசை அடைந்தபோது, ***அனடோல்*** மற்றவர்களிடமிருந்து பிரிந்து, நகரின் வர்த்தகப்பகுதி நோக்கி சென்றார். அவர் தனது சைக்கிளை ***டுவல் சீஸ் தொழிற்சாலை***யின் முன் நிறுத்தி வைத்தார்.

அவர் தனது குட்டி எலி உடலை சுலபமாக கதவின் கீழ் நுழைத்துக்கொண்டுவிட்டார், தனது பெட்டியையும் மறக்கவில்லை. ஆஹா, உள்ளே எப்படி ஒரு நறுமணம்! அவருடைய உணர்ச்சிமிக்க மூக்கு --- ***கேமிம்பெர்ட், போர்ட் சாலுட், ப்லெ, செயின்ட் மார்செலின், ரோக்குஃபோர்ட், பரி*** போன்ற விதவிதமான ருசியுடைய ***சீஸ்***களின் மணத்தை மோப்பம் பிடித்தது. நல்லது, நான் இரவு முழுவதும் மோப்பம் பிடித்தபடி நிற்க கூடாது. செய்ய வேண்டிய வேலை இருக்கிறது! என்று நினைத்தார் ***அனடோல்***

அவர், இறுதியாக தான் எதைத் தேடிக்கொண்டிருந்தாரோ அதை கண்டுபிடிக்கும் வரை ஒரு இருண்ட தாழ்வாரத்திலிருந்து மற்றொன்றிற்கு விரைந்தார் – அது தான் அந்த "சீஸ் சோதனை அறை!"

அந்த அறை மங்கலான வெளிச்சத்துடனும், நீண்ட மரத்திலான மேசைகள் நிறைந்ததாகவும் இருந்தது. அவைகளின் மீது பெரும் குவியல்களாக, சீஸ்கள், பல்வேறு வடிவங்களிலும் அளவுகளிலும் இருந்தன.



மேலும் தாமதிக்காமல், ***அனடோல்*** அருகில் உள்ள மேசை மீது ஏறினார்.
முதலில் அவர் **காமேம்பெர்ட்டின்** ஒரு துண்டைச் சுவைத்தார்.
“ம்ம்ம்! இதை விட சுவையாக இருக்க முடியாது!“
அவர் தனது பெட்டியைத் திறந்து, கூடுதல் சிறப்பான சுவை மிக்கது என்ற குறிப்பு வில்லையை எடுத்து, அதில் பொருத்தினார்.
அடுத்தது மிகவும் புளித்து இருந்தது. அதன் மீது அவ்வளவு நன்றாக இல்லை என்ற வில்லையை பொருத்தி, அதில் பென்சிலால் ஏதோ எழுதினார்.
சீஸ் வரிசையின் மீது பல மணிநேரம் மேலும் கீழும் சென்று வந்த அனடோல், முகர்ந்தும், சுவைத்தும், குறிப்பு வில்லைகளைப் பொருத்தியவாறும் இருந்தார்.






இறுதியாக, அவரது வேலை முடிந்தது.
“ஐய்யா! இப்போது டுவால் தொழிற்சாலை ஒரு சில விஷயங்களைக் கற்றுக் கொள்ளும்.
எலிகள், உலகின் சிறந்த சீஸ் மதிப்பீட்டாளர்கள் என்று எங்கிலும் அறியப்படுகின்றன.
என்னை பொருத்தவரையில், நான் பெருமையுடன் வீட்டிற்கு சிறிது எடுத்து செல்லவேண்டும், ஏனெனில், அது நான் கௌரவத்துடன் ஈட்டியது.



அடுத்த நாள் காலை ஆலையில் பெரும் பரபரப்பு. வினோதமான அந்த சிறிய குறியீடுகளை யார் எழுதியிருக்கக்கூடும் என்று அனைவரும் ஆச்சரியப்பட்டனர்.
திருவாளர் ***டுவல்***லே வந்துவிட்டார்.
"***அனடோலுக்கு*** சீஸ் பற்றி எவ்வளவு தெரியும் என்பதை விரைவில் நாம் தெரிந்து கொள்வோம்!“
**ருக்பெர்ட்** சீஸை அவர் சுவைத்துப் பார்த்தார்.
“அருமை! ***அனடோல்*** மிகவும் சரியாக சொல்லியிருக்கிறார் – இதற்கு கூடுதலாக ஆரஞ்சுத் தோல்கள் சேர்க்க வேண்டும்! எல்லோரும் இப்போது கவனமாகக் கேளுங்கள் – சமீபகாலமாக நமது வியாபாரமானது மிக நன்றாக ஒன்றும் நடப்பதில்லை. நாம் ***அனடோல்*** பரிந்துரைக்கும் முறையில் சீஸ்களைத் தயாரிப்போம், பின்னர் என்ன நடக்கிறது என்று பார்ப்போம்.” என்றார்.

ஒவ்வொரு இரவும், மென்மேலும், அனடோல் தனது சிறிய குறிப்புகளை பொருத்திச்சென்றார்.

ஒவ்வொரு நாளும் சீஸ் தயாரிக்கும் தொழிலாளர்கள் கூடுதலாக மாற்றங்களை செய்தனர், விரைவில் வியாபாரம் **பெரும் முன்னேற்றம் கண்டது.**



***பிரான்சி***ன் மக்கள் ***டுவல்*** சீஸ் மட்டுமே வேண்டும் என்று கேட்கத்தொடங்கினர், இல்லையென்றால் சீஸே வேண்டாம் என்றனர்.

***திரு. டுவல்*** தனது தொழிற்கூடத்தை விரிவு படுத்த வேண்டிய அளவுக்கு கிராக்கி மிகவும் அதிகரித்தது, மேலும் அனைத்து தொழிலாளர்களுக்கும் ஊதிய உயர்வையும் அவர் வழங்கினார்.

ஆனால், யார் இந்த குறிப்புகளை விட்டு செல்கிறார்கள் என்று அவரால் கண்டுபிடிக்க முடியவில்லை.

"ஏன் ***அனடோல்*** நம் முன்னே தோன்றுவதில்லை?"
என்று தனது காரியதரிசியிடம் கேட்டார் ***டுவல்***.
அவர் வெகுமதிப்பெறத் தகுதிவாய்ந்தவர் ---
நாம், நமது நற்பேறு, வளம் அனைத்தும் அவருக்கு
கடன்பட்டிருக்கிறோம்.
***அனடோலைச்*** சந்திக்க வேண்டும் என்று கெஞ்சி சிறு
குறிப்பு ஒன்றை எழுதினார்.
ஆனால் ***அனடோல்***, தான் யாரென்று அறியப்படாமல்
இருப்பதையே விரும்புவதாக அதில் எழுதினார்.



***திரு. டுவல், அனடோல்*** என்று பெயருடைய ஒவ்வொரு பணியாளரையும் அவரது அறைக்கு கேள்வி கேட்க அழைத்தார்.
ஆனால் ஒருவரும் தான் அந்தக் குறிப்புகளை வைத்தேன் என்று சொல்லவில்லை.
இது எந்த பயனும் இல்லை – ரகசியம், ரகசியமாகவே இருந்து போனது.
ஒரு நாள் மதியம் ***திரு. டுவல்*** தனது செயலாளரை அழைத்தார், ஒரு நீண்ட கடிதத்தை எழுதும்பொருட்டு சொல்லலானார்.



அன்று இரவு அனடோல் அந்த கடிதத்தைக் கண்டார்.



DUVAL
LE MEILLEUR FROMAGE DU MONDE

என் அன்பிற்குரிய ***அனடோல்***,

இந்த கடிதம், நீங்கள் செய்த அனைத்திற்கும் உங்களுக்கு நன்றி தெரிவிக்கவே எழுதப்பட்டுள்ளது. உங்கள் தனிப்பட்ட உதவியினால் மட்டுமே எங்கள் வெற்றி சாத்தியமானது!

நான் உங்களை நேரில் சந்திக்க விரும்புகிறேன், ஆனால் நீங்கள் அறியப்படாதவராகவே இருக்க விரும்பியதால், நான் உங்கள் ரகசியத்தை மதிக்கிறேன்.

நீங்கள் யாராக இருந்தாலும், நீங்கள் சீஸை மிகவும் விரும்புபவர் என்று தெளிவாகத் தெரிகிறது.

தயவுசெய்து, நீங்கள் விரும்பும் அணைத்து சீஸ்களை எப்போது வேண்டுமானாலும் எடுத்துச்செல்லலாம்.

ஒவ்வொரு நாள் இரவும் அருமையான பிரஞ்ச் பிரெட், **எக்லேர்ஸ் சாக்லேட்** மற்றும் சுவையான மற்ற உணவுவகைகளும் உங்களுக்காகவே வைக்கப்பட்டிருக்கும். நான் உங்களுக்கு மிக உயர்ந்த வெகுமதியளிக்க விழைகின்றேன்.

***அனடோல்*** – நாங்கள் உங்களுக்கு மரியாதை செய்கிறோம்! இப்போதிலிருந்து நாங்கள், உங்களை, **துணைத் தலைவர், (பொறுப்பு) சீஸ் பரிசோதனைத் துறை** என்று அன்புடன் நினைவுக்கூறுகிறோம்.

நினைவில் கொள்ளுங்கள் - இங்கே, நீங்கள் எப்போதும் வரவேற்கப்படுவீர்கள்!

உங்கள் மகிழ்ச்சிக்கான அனைத்து நல்வாழ்த்துக்களுடன்.

Henri Duval



*டவ்சிட்டி (அனடோலின்* மனைவி) அந்த கடிதத்தை பார்த்து,
அவர் சொல்லியது,
*"இன்று முதல் நீங்கள் எந்த அந்நியர் வீட்டிலும் எதையும் தோண்டித்துருவ வேண்டிய அவசியம் இல்லை." அச்செயல் முடிவுக்கு வந்துவிட்டது! நீங்கள் தான் உலகின் மிகவும் புத்திசாலியான எலி!"*



*பாலும், பவ்லெட்டியும், க்ளாட்டும், க்ளாடெட்டியும் மற்றும் ஜார்ஜும், ஜார்ஜ்ட்டியும்* நாற்காலியின் மீதேறி அவரைக் கட்டிக்கொண்டனர்.

"நாங்கள் மிகவும் பெருமைப்படுகிறோம்! எங்கள் அன்பான அப்பா இப்போது ஒரு மரியாதைக்குரிய வணிக எலியார்! "

அடுத்த நாள் ***அனடோல்*** , ***காஸ்டனை*** தனது உதவியாளராக இருக்கும்படி அழைத்தார்.

“மகிழ்ச்சியுடன் நான் உன்னுடன் சேர்வேன்!”



பின்னர் அவர் தனது நண்பனின் இரு கன்னங்களிலும் முத்தமிட்டு, “***அனடோல் நீடூழி வாழ்க!***” என்று கோஷமிட்டார்.

அவர் என்ன நாம் வாழும் முறையில் திருப்தி அடைந்து சும்மா இருந்துவிட்டாரா?
இல்லை, இல்லை.
அவர் ஒரு செயலாற்றும் எலி— மதிக்கத்தக்க எலி ---

**ஓர் உன்னதமான எலி.**

அப்படியாக அது நிறைவுக்கு வந்தது. *அனடோலு*ம் அவரது கூட்டாளியும் பக்கம்பக்கமாக இணக்கத்துடன் அந்தத் தொழிற்சாலையில் பணியாற்றினர். ரகசியம், ரகசியமாககவே எப்போதும் இருந்து போனது.

ஆகையால், நீங்கள், எப்போதாவது மீந்ததைத் தேடும் ஒரு எலியைச் சந்திக்க நேருமாயின், அது பிரான்சிலேயே மிகவும் மகிழ்ச்சியான மற்றும் மிகவும் திருப்தியடைந்த *அனடோலா*க இருக்க சாத்தியமில்லை என்பதை அறிவீர்கள்.



